


# ஆனையும் பூனையும்

பெ. தூரன்



பழனியப்பா பிரதர்ஸ்

சென்னை-14 திருச்சி-2

சேலம்-1 கோயமுத்தூர்-1




கோழீ கோழீ கொ கொ கொ
கொண்டைச் சேவல் கொக் கரக் கோ
குயிலே குயிலே கூ கூ கூ
கொஞ்சும் கிளியே அக்கக்கா
காக்கை காக்கை கா கா கா
கத்துங் குருவீ மெய் மெய் மெய்
அன்பாய்த் தீனி வை வை வை
மாடே மாடே மா மா மா
வண்டிக் குதிரை ஹீ ஹீ ஹீ
ஆடே ஆடே மே மே மே
அசையும் எருமை ஙொய் ஙொய் ஙொய்
பூனை பூனை மியாவ் மியாவ் மியாவ்
பூச்சி நாயே லொள் லொள் லொள்
அவைநம் தோழர் மெய் மெய் மெய்
அன்பாய்த் தீனி வை வை வை.

எத்தனை பெரிய யானை—அதற்கு
எத்தனை சின்ன வால்!
குத்தும் வெள்ளைத் தந்தம்—பெரிய
குன்றைப் போல வயிறு!
தூணைப் போல கால்—முன்னல்
தொங்கி ஆடும் மூக்கு!
காது ரண்டும் முறம்போல்—அதன்
கண்கள் சின்ன வட்டம்
எத்தனை பெரிய யானை—அதற்கு
எத்தனை சின்ன வால்!



# கன்றுக் குட்டி

அம்மா அம்மா கன்றுக் குட்டீ
ஆரைக் கூப்பிட்டாய் கன்றுக் குட்டீ
சும்மா சும்மா கத்தாதே
அம்மா சீக்கிரம் வந்திடுவாள்.

அம்மா அம்மா கன்றுக் குட்டீ
ஆரைக் கூப்பிட்டாய் கன்றுக் குட்டீ
பச்சைப் புல்லு நான் தருவேன்
பசியைப் போக்கிக் கொள்ளாயோ?

அம்மா அம்மா கன்றுக் குட்டீ
ஆரைக் கூப்பிட்டாய் கன்றுக் குட்டீ
அம்மா சீக்கிரம் வந்திடுவாள்
அன்பாய்ப் பாலும் தந்திடுவாள்.

# கட்டு மரம்



கட்டு மரம் போகுது பார் ;
    கடலில் நீச்சம் போடுதுபார் !
பட்டுப் பூச்சி யிறகைப் போலப்
    பாய் விரித்துப் பாயுது பார் !
அலைகள் மேலே தாவுது பார் ;
    ஆட்டம் ஆடிக் காட்டுது பார் !
மலையைப் போல அலை வந்தாலும்
    மலைக் காமல் தாண்டுது பார் !
தொடு வானம் தொட்டுக்கொண்டு
    தூரத் திலே செல்லுது பார் !
அடை யாளம் தெரியா மல்
    அத்தனை சின்ன தாகுது பார் !
கட்டு மரம் போகுது பார் ;
    கடலை உழுது தள்ளுது பார் !
எட்டி எட்டி மீன் பிடிக்க
    ஏலே லமே போடுது பார் !




ஆனையொன்று வந்ததாம்
        அசைந்தசைந்து நடந்ததாம்
பூனையொன்று பார்த்ததாம்
        பதுங்கிக் கிட்டச் சென்றதாம்
ஆனை மேலே ஏறியே
        அழகாய்ப் பவனி வந்திடப்
பூனை யாசை கொண்டதாம்
        பதுங்கிப் பதுங்கிச் சென்றதாம்
ஆனை காதை ஆட்டியே
        அங்குமிங்கும் பார்த்ததாம்
தூணைப் போலக் காலிலே
        தொத்தியேற எண்ணியே
பூனை பதுங்கி யானையின்
        வாலின் பக்கம் போனதாம்
ஆனை தும்பிக் கையினை
        ஆட்டிச் சத்தம் செய்ததாம்
பூனை பயந்து நடுங்கியே
        பாய்ந்து ஓடி மறைந்ததாம்
ஆனையொன்று வந்ததாம்
        அசைந்தசைந்து சென்றதாம்.

# [illegible] மாமா

இந்து மாமா வாவா
சந்த மாமா வாவா

பொங்கும் கடல் மேலே
தங்கக் குடும்பம் போலே

இந்து மாமா வாவா
சந்த மாமா வாவா

வானத்திலே ஊர்ந்து
பாலைப்போலே காய்ந்து

மீனக் கூட்டம் சூழ்ந்து
மேகக் கூட்டம் பாய்ந்து

இந்து மாமா பந்து மாமா
சந்த மாமா வாவா.




மீனே மீனே மின்னும் மீனே
தண்ணீ ருக்குள் தாவும் மீனே
கெண்டை அவுரி கெளுத்தி மீனே
எந்நே ரமும்நீ தண்ணீ ருக்குள்
மூழ்கியிருந்தால் மூச்சடைக் காதோ?
எந்நே ரமும்நீ தண்ணீர் வீட்டில்
குஞ்சுக ளுடனே கூடியி ருந்தால்
சொக்கா யில்லை துணிகளு மில்லை
கம்பளி யாடைகள் கட்டவு மில்லை
கூதல் வந்தால் ஏதுநீ செய்வாய்?



வட்டமிடுங் கருடா—திருமால்
வாகனமாங் கருடா
பட்டமதைப் போலே—அசையாது
பறந்து மிதக்குங் கருடா
சங்கு முகத்துக் கருடா—தரைமேல்
தாவிப்பாயும் கருடா
எங்கள் தாத்தா கண்டால்—உடனே
எழுந்து வணங்கும் கருடா

# ஆட்டுக்குட்டி



ஐப்பசி மாதம் வந்தது
அடை மழையும் பேயுது
ஆட்டுக்குட்டீ ஆட்டுக்குட்டீ
வீட்டுக்குள்ளே ஓடிவா.
சும்மா நீயும் மழையிலே
துள்ளித் துள்ளி ஓடாதே
அம்மா கண்டால் வைவாளே
ஆட்டுக்குட்டீ ஆட்டுக்குட்டீ



# டக்டக் கடிகாரம்

டக் டக் கடிகாரம்

தட்டத்திலே பணியாரம்

குட்டிக் குட்டிச் சுண்டெலி

எட்டி எட்டிப் பார்க்குதாம்

தட்டத்திலே கண்ணை வைத்துக்

கிட்டக் கிட்ட நகருதாம்

டண் டண் கடிகாரம்

தாவியோடுதாம் சுண்டெலி !




பட்டம் பறக்குது பார்
பாய்ந்துமேகம் சுற்றுது பார்
வட்டமிட்டுப் பறவைபோல
வானில் ஓங்கி ஆடியாடிப்
பட்டம் பறக்குது பார்

கட்டிநாங்கள் விட்ட பட்டம்
காற்றில் ஏறிப் பாயும்பட்டம்
குட்டிக்கரணம் போடும் பட்டம்
கோணல் வாலை ஆட்டும் பட்டம்
பட்டம் பறக்குது பார்

பட்டம் போலே நானும் மேலே
பறந்து பறந்து திரியவேணும்
கட்டிலாது வானவெளியில்
கருடன்போல மிதக்கவேணும்
பட்டம் பறக்குது பார்

ANAIYUM—POONAIYUM


| | | |
|---|---|---|
| Subject | : | NURSERY RHYMES |
| Author | : | P. THOORAN |
| Publishers | : | Palaniappa Brothers |
| Printers | : | Asian Printers, Madras-14 |
| Price | : | Rs. 1-50 |
| First Edition | : | 14th November, 1957 |
| Fourth Edition | : | Jan. 1969 |